[10th September 1960

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஆலங்குடி தாலூகாவில் 73 பேர்கள் சில்லரை வியாபாரிகள். இப்படி சில்லரை வியாபாரிகளுக்குக் கொடுப்பதோடுகூட, ஓட்டல்களுக்கும் பேக்கரி போன்றவைகளுக்கும் பிரத்தியேகமாகக் கொடுக்கப் படுகிறது. அதிலே, புதுக்கோட்டை டிவிஷனைப் பொறுத்த மட்டில் மாதத்திற்கு 169 மூட்டைகள் அளிக்கப்படுகின்றன.

SRI S. LAZAR: Is it not a fact that the entire allotment of sugar to Tiruchirappalli district is being received by one or two wholesale dealers in the district and may I know, Sir, whether the Government have made any special arrangements to see that the entire allotment is being distributed within the district itself?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The monthly quota to each retailer has been fixed on a permanent basis and therefore he takes delivery of this monthly quota without any difficulty or delay.

*Intensive Cultivation Scheme*

* 583 *Q.*—SRI N. MARUDACHALAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN): கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

தீவிர சாகுபடி திட்டம் வடாற்காடு ஜில்லாவில் ஆரம்பிக்க உத்தேசம் உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

*Village Panchayats Act*

* 584 *Q.*—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Home be pleased to state whether there is a proposal by the Government to frame rules under the Madras Village Panchayats Act, 1958, for the proper supervision over and implementation by the Executive Officers of the decisions taken by their respective Panchayat Boards?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI S. LAZAR: மேலும் மேலும் அதிகாரம் பரவலாகக் கொடுக்கப்படவேண்டுமென்று சொல்லி பஞ்சாயத்துக்களுக்கு அதிகமான அதிகாரம் வழங்கவேண்டுமென்று சொல்வது ஒரு புறமிருக்க, அந்தந்த பஞ்சாயத்திலே வேலை செய்யக்கூடிய பஞ்சாயத்து ஆபீசர் பஞ்சாயத்தினுடைய எண்ணத்திற்கு இணங்கி நடக்காமலிருக்கும் நிலை இருக்குமானால் காரியம் எதுவுமே நடப்பதில்லையே. இதைத் தவிர்க்க உடனடியாக ஏதாவது விதி ஏற்படுத்த அரசாங்கம் முயற்சி செய்யுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: பஞ்சாயத்து நிர்வாக அதிகாரிகளின் நடத்தையைப்பற்றி அப்போதைக்கப் போது மேற்பார்வையிடும் அதிகாரிகள் கவனித்துக்கொண்டு வருகிறார்கள். ஏதாவது தலையீடு வேண்டியிருந்தால் அல்லது திருத்தவேண்டியிருந்தால் அவர்கள் வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவார்கள்.